# திருநீறும் சிவமணியும்





கழக வெளியீடு

கழக வெளியீடு: எ0ரு

உ

# திருநீறும் சிவமணியும்

ஆசிரியர்:

சித்தாந்த பண்டிதர், கழகப்புலவர்,

திரு. ப. இராமநாத பிள்ளை அவர்கள்

[முதற் பதிப்பு]

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

திருநெல்வேலி. :: சென்னை-1.




ஓம்

# பதிப்புரை

**திருநீறு சிவமணி** என்னும் இரண்டும் செந்நெறியாளரின் திரு அடையாளங்களாகும். இவ் அடையாளங்களை மங்காமல் அணிந்திருப்போர் மனம் தூயராய் இருப்பர். அம்மனத்தின்வழி நிகழும் சொல்லும் செயலும் நல்லனவாகவே நிகழும். இவ் அடையாளங்கள் ஏனைச் சமயத்தார் கைக்கொண்டு ஒழுகும் வெறும் அடையாளங்கள் போன்றில்லாமல் பேருண்மையினையும் உணர்த்துவன. பிறவி நோயை நீக்குவதுபோன்று உடலுறு நோயை உடனடியாக நீக்கும் ஒண்மையது.

இவ் அடையாளங்களைப் பூண்பார் நினைவில் என்றும் மாறாது கடவுள் தம்மோடு உடனிருக்கிறார் என்னும் உண்மையே தோன்றும். அதனால் நன்மையிற் செல்லும் ஊக்கம் நாளும் பெருகும். அரசியலார் கொள்ளும் கொடி முதலிய அடையாளங்கள் போன்று வணங்கத் தகுந்த வான்பொருளும் ஆகும். திருநீறு நோய், பேய்பிடி, நச்சுத்துன்பம் முதலிய பல இன்னல்களை உடனே போக்கும்; மேலும் வரவொட்டாது தடுக்கும். சிவமணி நம் மேனிமேல் திகழ்வதால் அதன்கண் தோன்றும் மின்ஆற்றல் நம் உடலிற் பாய்ந்து நோய் நீக்கத்தையும் உடலுரத்தையும் தரும். இவ்வாற்றால் திருநீறு சிவமணி இரண்டும் பொருள்நிறை அடையாளங்களாக இருப்பது புலனும். இவ் அடையாளம் பூண்பார் நடமாடும் கோயிலாவர். இவற்றை விளக்கும் இந்நூலைக் கற்றும் கற்கத் துணைசெய்தும் கடவுள் அருள் எய்தி இன்புறுவாராக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

அப்பர் அச்சகம், சென்னை-1.—5-54; C. 5,200.

ஓம்
திருச்சிற்றம்பலம்

# திருநீறும் சிவமணியும்

## க. திருநீறு

### தொன்மை

தொன்மைத் தமிழ்நெறிச் செல்வர்களாகிய திருநெறியினரும், திருமால் நெறியினரும், பிறரும் தெய்வத் திருஅடையாளமாக மேற்கொண்டு ஒழுகிவருவது திருநீறே. அம்மட்டோ, மற்றைய மேல்நாடு கீழ்நாடுகளிலுள்ள அறிஞரும் பிறரும் திருநீறே மேற்கொண்டு சிறந்தனர். இவ்வுண்மை இன்றும் அவர்கள் கொண்டாடிவரும் "சாம்பற்பூசுந் திருநாள்'' என்னும் மெய்ம்மைப் பெருநாள் ஐயமின்றி உணர்த்தி வருகின்றது. திருநெறியினர்—சித்தாந்தசைவர். திருமால் நெறியினர் — வைணவர். திருநீறு—திருவெண்ணீறு.

### தூய்மை

காணப்படும் உலக உடம்புகள் ஐம்பூதப்புணர்ப்பினல் உளவாவன. இவற்றைப் பருப்பொருள் என்போம். இவை ஒரு தன்மையன. ஆனல், பெருக்க சுருக்க நிலையின. இவை உண்மை நிலையிற் சாம்பராம் தன்மைய. இவற்றை மேலெழுந்த வாரியாகப் புறநோக்கின் தூய்மையுடையன வாகக் காணப்படும். பைம்மறியாப் பார்த்தல்போல் அக நோக்கிய வழித் தூவாநிலையே—அழுக்கு நிலையே புலனாகும். இவ் அழுக்கு, கட்புலனாம் நிலன் நீர் நெருப்பு என்னும் மூன்றனுள் எதனல் முற்றும் அகலும் என ஆராயின், நெருப்பினல் என்று புலனாகும்; என்னை? நிலனும் நீரும் ஒளிவடிவின்றி அழுக்குற்று நிற்கும் தன்மையான்.

நெருப்பு ஒன்றே ஒளிவடிவோடு, அழுக்கற்று விளங்கக் காண்கின்றேம். இந் நெருப்பே இயற்கையிலேயே அருள்ஒளி வடிவாய்த் தூய்மையாகத் திகழ்கின்ற முழு முதற் கடவுளுக்கு ஒருபுடை ஒப்பாக உணர்த்தற்குரியது. முதல்வன் தன்னைச் சார்ந்த ஆவிகளின் மும்மல அழுக்கை அகற்றித் தூய்மை ஆக்கித் தன் வண்ணமாய் ஒளிறச் செய்கின்றான். அதுபோல் நெருப்பும் உலகுடம்புகளை அவற்றின் உண்மை மறைப்பாம் பருமை அழுக்குகளை அகற்றித் தன்வண்ணம் ஒளிறச்செய்து தூய சாம்பராக்கு கின்றது. எனவே, எல்லாப் பொருள்களின் உண்மைத் தூய நிலையை உணர்த்துவது சாம்பல் ஒன்றேயாம். இவ்வுண்மை புலப்படவே தெய்வநாட்டமுள்ள மெய்யடி யார்கள் தூய சாம்பலை மெய்யார அணிந்து மிளிர்கின்றனர். இத்திருஅடையாளம்போல் சந்தனம் குங்குமம் முதலிய ஏனை அடையாளங்கள் சிறக்கும் வன்மையுடையன அல்ல.

மேலும் எல்லாம் ஒடுங்கிய காலத்து எஞ்சி நிற்பது சாம்பர் ஒன்றேயாம். இவ்வுண்மை தேற்றவே பேரொடுக்கப் பெருமானாகிய முழுமுதற் சிவன் திருநீறணியும் செல்வனார் என எல்லாராலும் போற்றப்படுகின்றனன். 'புறம்தூய்மை நீரான் அமையி'னும், அந்நீர் 'அகம் தூய்மையாகிய வாய்மை'த் தெய்வ நாட்டத்தினைக் குறிக்கும் திரு அடை யாளமாகாது, திருநீறு ஒன்றே அதனைக் குறிக்கும் திரு அடையாளம் என்க. எனவே புறந்தூய்மை சிறப்பாக நீறு ஒன்றானே அமையும் என்க.

மாண்பு

திருமுறைக்கண் திருநீற்றுமாண்பு பல இடங்களில் மொழிந்தருளப் பெற்றுள்ளது. அம்மட்டோடும் அமை யாது ஆளுடைய பிள்ளையார் திருநீற்றுத் திருப்பதிகம் என ஒன்றருளிச்செய்தனர். திருநெறிய தமிழாகிய தேவாரத் தின்கண் தனித் திருப்பதிகங்களாக விளங்குவன: **திருநீற்றுப்பதிகம், திருப்பாசுரம், திருஅங்கமாலை, திருத்தொண்டத் தொகை** என்னும் நான்குமேயாம். இவை முறையே

திருவருளையும், திருவருள் விளக்கத்தையும், திருவருள் வழிபாட்டையும், வழிபட்டுய்ந்த மெய்யடியார்கள் சிறப்பையும் குறிப்பன.

க. திருநீறு திருமுறைத் திருமாமறையாம் மந்திரமாகும்.
உ. ,, வானவர்கள் தத்தம் மேனிமேல் அணிந்து மகிழும் தகையதாகும்.
ங. ,, உண்மை அழகை ஊட்டுவிக்கும் சுந்தரத் தோற்றத்ததாகும்.
ச. ,, திருவருள் உருவாய்த் தொழப்படுந் தன்மையதாகும்.
ரு. ,, வீடு பேற்றுக்குக் கூடும் வாயிலாகும்.
சா. ,, நன்னெறிக்குவழிகாட்டும் ஒண்மையதாகும்.
எ. ,, திருநான்மறைகளில் சிறப்பித்து நவிலப் படும் மெய்ம்மையதாகும்.
அ. ,, உடல்நோய், உளநோய், உயிர்நோய் முதலிய கொடுந்துன்பங்களையும் அடும் தன்மையது.
கூ. ,, மெய்யுணர்வு கைவரச் செய்யும் செம்மை வாய்ந்தது.
க0. ,, பழியொடு படரும் இழிவுகள் அனைத்தும் ஒழியச் செய்வது.
கக. ,, எப்போதும் ஓதிஉய்யும் செப்பம் வாய்ந்தது. ஓதுதல்—பாராயணம் செய்தல். திருவெண் நீறு என்னும் சொல்லும் எண்ணின் திருஐந் தெழுத்தேயாம்.
கஉ. ,, மெய்யுணர்வு நல்கும் இறைநூல்களில் ஓதப் படுவது.
கங. ,, வீடுபேற்றுச் செவ்விவாய்ந்த முனிவர்கள் நனிவிரும்பி அணிந்து அகமகிழும் இனிமை வாய்ந்தது.
கச. ,, அழிவிலா உண்மையாவது.
கரு. ,, மெய்ந்நெறி நிற்பார் அனைவரும் மேவிப் புகழ்வது.
கசா. ,, மாறில் பற்றும் பத்தியினை வழங்குவது.

கஎ. திருநீறு போற்றிப் புகழ ஈறில் இன்பந் தருவது.
கஅ. ,, இம்மை வாழ்வைச் செம்மையுறச் செய்வது.
கசு. ,, கண்டார்க்கு இன்பந் தரும் உண்மையது.
உ0. ,, அணிந்தார்க்கு ஆறு அழகைத் தருவது.
உக. ,, சிவத்தைப் பேணி மங்காமல் பூசும் மெய்யன்பர்கட்கெல்லாம் நன்மதிப்புத்தருவது.
நீங்கா மாண்பினை ஓங்குவிப்பது
உஉ. ,,
உங. ,, தொடர்ந்துவரும் நல்லறிவை வளரச் செய்வது.
உச. ,, மாற்றமும் மனமும் செல்லா ஏற்றமாம் உலகம் எய்துவிப்பது.
உரு. ,, பண்ணிய பாவத்தை நண்ணிநின்று அறுக்கும் புண்ணிய உருவாய் உள்ளது.
உசு. ,, அவாவினை ஆற்ற அறுக்கும் தவாப்படை ஆவது.
உஎ. ,, எல்லாப் பொருள்களின் முடிவாய்த் திகழ்வது.
உஅ. ,, உலகெலாம் புகழும் ஒண்மை வாய்ந்தது.
உகூ. ,, அழியாப் பெரும்பொருட்கு வழியாம் அறநிலைப் பொருளாவது.
ங0. ,, எந்நெறியினர்க்கும் அமையப்பொருந்துவது.
ஙக. ,, வாய்மைத் தூயோர் தாய்மையோ டணிவது.
ஙஉ. ,, மும்மல காரியப் பிணிப்பாய்த் திரியும் கோட்டைகளை நீறுக்குவது.
ஙங. ,, பிறப்பாகிய இம்மைக்கும் மேற்பிறப்பாகிய உம்மைக்கும் சிறந்த துணையாவது.
ஙச. ,, இடம் செயல் காலம் எல்லாவற்றினும் விடாது பயிலப்படுவது.
ஙரு. ,, பிறப்பிற்குக் காரணமாகிய இறப்பினை நீக்குவது.
ஙசு. ,, தன் தூய்மையால் சார்ந்த பொருள் அனைத்தையும் தூய்மை செய்வது.
ஙஎ. ,, பேரொடுக்கப் பெருமானை நினைவூட்டும் தன்மையால் பெரியோரால் மதிக்கப்படுவது.

௩அ. திருநீறு திருவருள் உருவாய்த் திகழ்வது.
௩௯. ,, காதலித்து அணிவார்க்குக் கணக்கில் பொறுமை கைகூடச் செய்வது.
௪0. ,, இருவகைச் செருக்கினர்க்கு என்றும் எட்டா இயல்பினது.
௪௧. ,, வழிப்பேற்று ஒளியினர்தம் விழுமிய யாக்கையின் மேலது. வழிப்பேறு—பத முத்தி. விழுப்பேறு—பரமுத்தி.
௪௨. ,, உடலுறு நோயை ஒழிக்கும் ஒண்மையதாய்ப் பிறவாப் பெருவாழ்வு அருள்வது.
௪௩. ,, வேந்தன் நிறமாம் வெண்மையாயிருத்தலால் சிவபெருமான் வடிவினது. வேந்தன்—சிவபெருமான்.
௪௪. ,, கங்காளன் ஆகிய சிவபெருமான் பூசி வழிகாட்டும் கவசத்தன்மை வாய்ந்தது.
௪௫. ,, அழலினைச் சார்ந்த பருப்பொருள்கள் தூயவாக்கப்பட்டு வெள்ளிய நீறாய் அதனையே பற்றுக்கோடாகக் கிடப்பதுபோல் சுத்தமாயை முதலான ஏனைப்பருப்பொருள்கள் இறைவன்தன் ஞான அனலின் சேர்க்கையால் தூயவாக்கப்பட்டு அவனையே பற்றுக்கோடாகக் கிடக்கும் வாய்மை காட்டுவது.

சுடலைப்பொடி

பேரொடுக்கப் பெருமான் "மண்முதற் சிவமதீரு"யுள்ள மெய்கள் அனைத்தையும் ஒருங்கே ஒடுக்குவன். மெய்கள்—தத்துவங்கள். இத்தத்துவம் மூவகைப்படும். அவை, உடல்மெய், உணர்வுமெய், உணர்த்துமெய் என்பன. இம்மூன்றும் முறையே ஆன்மதத்துவம், வித்தியாதத்துவம், சிவதத்துவம் எனக் கூறப்படும். ஆன்மதத்துவம் இருபத்துநான்கு; வித்தியாதத்துவம் ஏழு; சிவதத்துவம் ஐந்து; ஆகமொத்தம் அருஞ்சைவர்தத்துவம் முப்பத்தாறு. இத்தத்துவங்களான் ஆவிகட்கு உடல், கலன், உலகு,

ஊண் முதலியன வினைக்கீடாக முழு முதல்வன் ஆக்கி அளித்தருள்வன். இவ்வுடல்கலன் முதலியவைகளை நெற்றிக் கண் நெருப்பால் சுட்டெரித்துப் பேரொடுக்கம் புரிவன். அச்சாம்பலினைப் பேரொடுக்க அடையாளமாகப் பூசியருள்வன். இதுவே "காடுடைய சுடலைப்பொடி."

**நம்பக அடையாளம்**

இடையிடையே எவரானும் அடக்க ஒண்ணா இன்னாதாரை நன்னெறிப்படுத்த இறைவன் அருள் தோற்றமுற்று முறைசெய்யுங்கால் ஏற்படும் படுகளத்து அவரெலாம் மாள்வர். அச்சாம்பலை அணிந்து ஆடுவன் ஆண்டான். அவ்வுண்மை போற்றிப் புகழப்படும் தொன்மைச் செந்தமிழ்ப்பா வருமாறு :

மண்டமர் பலகடந்து மதுகையால் நீறணிந்து
பண்டரங்கம் ஆடுங்கால் பணைஎழில் அணைமென்தோள்
வண்டரற்றுங் கூந்தலாள் வளர்தூக்குத் தருவாளோ,

—கலித்தொகை, கடவுள் வாழ்த்து.

மேலதன் விரிவு :

"ஏறமர் கடவுள் மூஎயில் எய்வழிக்
கூறுகூ றாகக் கோடியோடும் படையோடும்
வேறுவே றுருவின் விண்மிசைப் பரத்தனர்
அவ்வழி ஒளியோடும் உருவோடும் தோன்றித்
தேர்முன் நின்று திசைதலை பனிப்பச்
சுவையும் குறிப்பும் ஒழிவில தோன்றி
அவையவை அவ்வழி ஆடினன் ஆட
மைந்தரும் மகளிரும் தந்நிலை அழிய
மெய்ப்படு சுவையோடு கைப்படை மறப்பக்
கடிய காலக் காற்றென ஏற்றவன்
படிநிலை திரியாப் பாண்டரங் கம்மே."

—கலித்தொகை, உரை-நச்சினார்க்கினியர்.

பதிற்றுப்பத்துக் கடவுள் வாழ்த்தில் ஈரணிக் குறிப்பால் திருநீறு பெறப்படும் :

“ எரியேள்ளு அன்ன நிறத்தன் விரியிணர்க்
கோன்றையம் பைந்தார் அகலத்தன் போன்றூர்
எயிலேரி யூட்டிய வில்லன் பயிலிருள்
காடமர்ந்து ஆடிய ஆடலன் நீடிப்
புறம்புதை தாழ்ந்த சடையன் குறங்கறைந்து
வெண்மணி ஆர்க்கும் விழவினன் நுண்ணூல்
சிரந்தை யிரட்டும் விரலனிரண் டுருவாய்
ஈரணி பெற்ற வெழிற்றகையன் ஏரும்
இளம்பிறை சேர்ந்த நுதலன் களங்கனி
மாறேற்கும் பண்பின் மறுமிடற்றன் தேறிய
சூலம் பிடித்த சுடர்ப்படைக்
காலக் கடவுட்கு உயர்கமா வலனே.”

—பதிற்றுப்பத்து, கடவுள்.

“காடமர்ந்து ஆடிய ஆடலன்” என்னும் குறிப்புத் திருநீற்றுப் பொலிவால் நண்ணும்.

வலந்தான் கழலிடம் பாடகம் பாம்பு வலம்இடமே
கலந்தான் வலநீ றிடம்சாந் தேரிவலம் பந்திடம்என்பு
அலந்தார் வலம்இடம் ஆடகம் வேல்வலம் ஆழிஇடம்
சலந்தாழ் சடைவலம் தண்ணம்குழல்இடம் சங்கரற்கே.’

—திருமுறை கக. சேரர். பொன் - சுரு.

பழந்தமிழ் வேந்தர்கள் திருமுடியின்கண் முக்கட் செல்வர் திருஅடியாம் திருவெண்ணீற்றை அன்புடன் அணிந்து அகமகிழ்வர். அவ்வுண்மை வருமாறு :

“ நிலவுக்கதிர் முடித்த நீளிரும் சென்னி
உலகுபொதி உருவத்து உயர்ந்தோன் சேவடி
மறஞ்சேர் வஞ்சி மாலையொடு புனைந்து
இறைஞ்சாச் சென்னி இறைஞ்சி வலங்கொண்டு.”

—சிலம்பு. கால்கோட் காதை.

சேவடி—திருநீறு ; திருவருளுரு.

போர்முனைக்கண்ணும் திருநீறு அணிபவர் உய்வர் :

உஉடு. "சடையினர் உடையினர் சாம்பற் பூச்சினர்,"

—சிலம்பு. கால்கோட் காதை.

ஏனாதிநாத நாயனார் புராணத்து அதிசூரன் வென்றது திருநீற்றால் என்க :

"கண்டபொழு தேகெட்டேன் முன்பிவர்மேற் காணாத
வெண்திருநீற் றின்பொலிவு மேற்கண்டேன்வேறினிஎன்
அண்டர்பிரான் சீரடியார் ஆயினார் என்றுமனம்
கொண்டிவர்தம் கொள்கைக் குறிவழிநிற் பேனென்று."

—திருமுறை கஉ. ஏனாதி - உஅ.

திருநீற்றுக்கோல நினைப்பூட்டைக் கண்டு நிலமுறப் பணிந்தனர் சேரர் காவலர் :

சேரர் பெருமான் தொழக்கண்டு சிந்தை
கலங்கி முன்வணங்கி
யாரென் றடியே னைக்கொண்ட தடியேன்
அடிவண் ணானென்னச்
சேரர் பிரானும் அடிச்சேரன்
அடியேன் என்று திருநீற்றின்
வார வேடம் நினைப்பித்தீர் வருந்தா
தேகும் எனமொழிந்தார்.

—திருமுறை கஉ. சேரமான் - கசு.

பெருந்தக்க பொருளாம் பெண்ணைப் பெறக் காதல் கொள் ஆடவர் அணிவது திருவெண்ணீறு :

"காய்சின வேலன்ன மின்னியல் கண்ணின் வலைகலந்து
வீசின போதுள்ளம் மீனிழந் தார்வியன் தென்புலியூர்
ஈசன சாந்தும் எருக்கும் அணிந்தோர் கிழிபிடித்துப்
பாய்சின மாவென ஏறுவர் சீறூர்ப் பனைமடலே."

—அ. திருக்கோவையார் - எசு.

ஈசன சாந்து—ஈசனுடைய நீறு.

ஆவிகளின் வினை அகல ஆண்டவன் நீறணிதல்:

" தினைவளம் காத்துச் சிலம்பெதிர் கூஉய்ச்சிற்றில்
முற்றிழைத்துச்
சுனைவளம் பாய்ந்து துணைமலர் கோய்து
தொழுதெழுவார்
வினைவளம் நீறெழ நீறணி அம்பல
வன்றன்வெற்பிற்
புனைவளர் கொம்பரன் னாயன்ன காண்டும்
புனமயிலே." —அ. திருக்கோ - ககஅ.

ஆண்டான் நீறாடி விளங்கல் ஆவிகள் நீறாடி விளங்கவே:

" அடித்தலத்தின் அன்றரக்கன் ஐந்நான்கு தோளும்
முடித்தலமும் நீமுரித்த வாறென்—முடித்தலத்தில்
ஆறாடி ஆறு அனலாடி அவ்அனலின்
நீறாடி நெய்யாடி நீ."

—கக. காரைக்காலம்மை - திரு
விரட்டைமணி - கச.

நீறுடுதல்—திருநீறணிதல்.

திருவெண்ணீற்றை மெய்ப்பொருள் எனக்கொண்டு உயிர் கொடுத்தும் நாட்டியவர் மெய்ப்பொருள் நாயனார். அம்மட்டோ ஆண்டவன் திருவடி சேருங்கால் வேண்டும் எண்ணமும் செயலும் அதுவே என்பதைக் காட்டி அருளியவரும் அவரே ஆம். அது வருமாறு:

" அரசியல் ஆயத் தார்க்கும் அழிவுறும் காத லார்க்கும்
விரவிய செய்கை எல்லாம் விளம்புவார் விதியி னாலே.
பரவிய திருநீற் றன்பு பாதுகாத்து உய்ப்பீர் என்று
புரவலர் மன்றுள் ஆடும் பூங்கழல் சிந்தை செய்வார்."
—கஉ. மெய்ப் - உஉ.

பாண்டிமாதேவியாராம் மங்கையர்க்கரசியார் "பொங்கொளிவெண் திருநீறு பரப்பினர்;" அதனல் அவர் பொற்புடைத் தெய்வம் ஆயினர். பின் இரண்டாம் குலோத்துங்க சோழ வேந்தரும் உலகெலாம் திருநீறு பரப்பித் திருநீற்றுச்சோழர் எனப் பெயர் பெற்றுத் திகழ்ந்தார்.

வினை தங்காமையும் வீழப்பேறு எய்தலும் நினையில் திருநீற்று நிறைவால் எய்தும்:

" கங்காளன் பூசும் கவசத் திருநீற்றை
மங்காமற் பூச மகிழ்வரே யாமாகில்
தங்கா வினைகளும் சாரும் சிவகதி
சிங்கார மான திருவடி சேர்வரே."

—க௦, திருமந்திரம் கரு௫௫.

கவசம்—மெய்புகு கருவி; போர்முனைச் சட்டை. திருவெண்ணீறு † மாயப்போர்செய் மெய்யடியார்கள் அணியும் போருடை.

திருமால் நெறியினரும், சிவபெருமான் பூசுவதும், திருக்கண்ணன் பூசுவதும், திருமாலடியவர் பூசுவதும் திருவெண்ணீறே என நவின்றுள்ளனர்:

வெந்தார் என்பும் சுடுநீறும் மெய்யிற் பூசிக் கையகத்தோர்
சந்தார் தலைகொண் டுலகேழும் திரியும் பெரியோன்........

—பெரியதிரு. ௬௫ ௫.

கொன்னவிலும் மூவிலைவேல் கூத்தன் பொடியாடி.

—பெரிய திருமடல் வரி - எக.

---

* 'தோலும்' அ. திருக்கோ - கஅ.

† 'ஞானவாள்' ,, திருவா. திருப்படை - க.

" கரிய மேனிமிசை வெளிய நீறு
சிறிதே யிடும்
பெரிய கோலத் தடங்கண்ணன் விண்ணோர்
பெருமான் தன்னை
உரிய சொல்லால் இசைமாலைகள் ஏத்தி
உள்ளப்பெற்றேற்கு
அரிய துண்டோ வெனக்கின்று தொட்டும்
இனியென்றுமே. " —திருவாய். ௩-௦௫௬.

" ஏறிய பித்தினொ டெல்லா வுலகுகண்
ணன்படைப் பென்னும்
நீறு செவ்வே யிடக்காணில் நெடுமால்
அடியாரென் றோடும்
நாறு துழாய்மலர் காணில் நாரணன்
கண்ணியீ தென்னும்
தேறியும் தேறுதும் மாயோன் திறத்தன
ளேயித் திருவே. " —திருவாய். ௩-௦௪௬.

பச்சிளங் குழவிமுதல் எல்லாருக்கும் நோயாலும், பேய் முதலிய தீய ஆவிகளாலும், கொடுவிலங்கு, நச்சுயிர் முதலியவற்றாலும் துன்பம் அணுகாவண்ணம் செந்நெறிச் செல்வர்களால் அணிவதும் அன்புடன் அணிவிப்பதும் திருவெண்ணீறே. இவ்வுண்மை ஆளுடையபிள்ளையாராகிய திருஞானசம்பந்தப் பெருமான் திருத்தோற்றத்து அவர் தமக்குத் திருக்காப்பாகத் திருநீறு அணிவித்தனர் என்னும் சேக்கிழாரடிகள் திருமொழியா லுணரலாம்.

" ஆறலவு செய்யசடை ஐயரரு ளாலே
பேருலகி னுக்கென வரும்பெரிய வர்க்கு
வேறுபல காப்புமிகை என்றவை விரும்பார்
நீறுதிரு நெற்றியின் நிறுத்திநிறை வித்தார். "

—௧௨. திருஞான - ௩௩.

ஆளுடைய பிள்ளையார் பாண்டியன் சுரநோயினைத் திருநீற்றுப் பூச்சினல் அகற்றியருளி நலமுறத் திருவருள் புரிந்தனர் :

"திருமுகம் கருணை காட்டத்
திருக்கையால் நீறுகாட்டி
பெருமறை துதிக்கும் ஆற்றல்
பிள்ளையார் போற்றிப் பின்னும்
ஒருமுறை தடவ அங்கண்
ஒழிந்துவெப் பகன்று பாகம்
மருவுதீப் பிணியும் நீங்கி
வழுதியும் முழுதும் உய்ந்தான்."

—கஉ. திருஞான - எஎ0.

திருநீற்றல் பாம்பின் நஞ்சகற்றும் பெருவழக்கு நாலடியாரின்கண்ணும் காண்க :

"கல்லெறிந் தன்ன கயவர்வாய் இன்னச்சொல்
எல்லாருங் காணப் பொறுத்துய்ப்பர்—ஒல்லை
இடுநீற்றல் * பைஅவிந்த நாகம்போல் தத்தம்
குடிமையான் வாதிக்கப் பட்டு."

—நாலடி. சினமின்மை - சு.

எச்செயல் துவங்குமுன்னும் திருவெண்நீறணிந்து துவங்கல்வேண்டுமென்பது மெய்யடியார்கள் கைக்கொண்டு ஒழுகிய அருள்மரபு. இவ்வுண்மை ஆளுடையபிள்ளையார் ஆண்டவன் அருளிய முத்துப்பல்லக்கு ஏறுங்கால் நிகழ்த்திய திருவருட்செயலாற் காண்க :

"மாலை யாமம் புலர்வுறும் வைகறை
வேலை செய்வினை முற்றிவெண் ணீறணி
கோல மேனிய ராய்க்கைம் மலர்குவித்து
ஏல அஞ்செழுத் தோதி எழுந்தனர்."

—கஉ. திருஞா - உ0அ.

---

* குறிப்பு: இஞ்ஞான்றும் மந்திரம்வல்லார் அனைவரும் எந்நெறியினராயினும் திருவெண்ணீற்றையே கைக்கொள்கின்றனர். நெறியினர்—சமயத்தினர்.

மாலை யாமம் புலர்வுறும் வைகறை என்னும் வைப்பு முறை தொல்காப்பிய முறையினை ஒட்டியது:

“மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையால் சொல்லவும் படுமே.”

—தொல். பொருள் - ரு.

மாயோன் — திருமால். சேயோன் — முருகன். வேந்தன் — சிவபெருமான். வருணன் — தண்அருள். வேந்தன், இந்திரன் அல்லன்.

ஒவ்வொருவரும் ‘மாலை யாமம்’ என்னும் திருமுறைத் திருமாமறைத் திருப்பாட்டை ஓதிக்கொண்டு எச்செயலையும் துவங்கல்வேண்டும். அப்பொழுது எல்லாம் இனிமையாய் நன்மையாய் நேர்மையாய் நிறைவுறும்.

காலை நண்பகல் மாலை நள்ளிரவு என்ற நாற்பொழுதுகளிலும் இறைவன் திருமேனி நினைவுடன் திருநீறணிந்து சிவனைத் தொழுதல் வேண்டும். காலைப்பொழுது தூய செம்மை நிறமாகத் திகழ்வதால் விழுமிய முழுமுதற் சிவபெருமானின் திருமேனியை நினைப்பூட்டுவதாகும். நண்பகற்பொழுது தூய வெண்மை நிறமாகக் காணப்படும். அஃது ஆண்டவன் திருமேனியிற் காணப்படும் திருவெண்ணீற்றினை நினைப்பூட்டும். மாலைப்பொழுது பொன்மை கலந்த செம்மை நிறமாகத் தோன்றும். இது சிவபெருமானின் திருச்சடையினை நினைப்பூட்டும். நள்ளிரவு செறிந்த இருளாய் இருக்கும். இஃது ஆண்டவனின் திருநீலகண்டத்தை நினைப்பூட்டும்*.

* ‘காலையே’—கக. காரைக். அற்புத - சுரு.

இன்றியமையாத திருவெண்ணீறு அணியவேண்டிய காலங்கள் மேற்குறித்த நாற்பொழுதுகளுமே அன்றி உணவின் முன்னும் பின்னும், உழைப்பின் முன்னும் பின்னும், உறக்கத்தின் முன்னும் பின்னும், உரையாடலின் முன்னும் பின்னும், கற்றலின் முன்னும் பின்னும், கற்பிப்பதன் முன்னும் பின்னும் பிறவும் என்க.

பின்னுள்ள சான்றோர் ஒருவர் திருநீற்றின் பெருமை கூறுவது வருமாறு :

ஆதி பகவன் ஞானவடி வழலிற்
பூத்து நித்தியமாய்
அணிந்தோர் தமக்கு வசிகரமாய் அருந்தி
னோர்கட் காரமுதாய்
நீதி அறியும் பசுமலத்தை நீக்கும்
ஒருநற் குறிகாட்டி
நிகழ்பே ரின்பக் கடலூட்டி நின்ற
புகழ்வெண் திருநீறே.

திருவெண்ணீற்றுக்கு வழங்கும் பெயர்க் காரணத்தை விளக்கும் பேரூர்ப் புராணச் செய்யுள் வருமாறு :

நீடல் உறுந்தீ வினையனைத்தும் நீற்றி விடலால் நீறென்றும்
வீடில் வெறுக்கை தருதலினால் விபூதியென்றும் உயிர்தோறும்
கூடு மலமா சினைக்கழுவும் குணத்தால் சாரம் என்றுமடம்
ஓட வளர்சோ தியைத்தரலாற் பசிதம் என்றும் உரைப்பாரால்.

வெறுக்கை—வீடுபேற்றுச் செல்வம்.

இடமும் குறிப்பும்

'திருவெண்ணீறு' அணிய வேண்டிய இடங்கள் 'சிவதீக்கை' என்னும் நூலின்கண் (6) குறித்தபடி பதினாறாகும். அப்பதினாறு இடங்களும் இன்றியமையாது எய்தவேண்டிய ஒழுக்க முதலிய பதினாறு பேறுகளையும் குறிப்பனவாகும். அவை வருமாறு :

க. உச்சி, உ. நெற்றி, ஙு. மார்பு, ச. கொப்பூழ், ரு, சு. இரு முழந்தாள், எ. வலத்தோள், அ. வலமுழங்கை, கூ. வலமணிக்கட்டு, க0. இடத்தோள், கக. இடமுழங்கை, கஉ. இடமணிக்கட்டு, கஙு, கச. இரு செவிகள், கரு. கழுத்தினடி, கசு. முதுகந்தண்டினடி என்பன.

க. ஒழுக்கம், உ. அன்பு, ஙு. அருள், ச. ஆசாரம், ரு. உபசாரம், சு. உறவு, எ. சீலம், அ. தவம், கூ. தானம், க0. வந்தித்தல், கக. வணங்கல், கஉ. வாய்மை, கஙு. துறவு, கச. அடக்கம், கரு. அறிவு, கசு அருச்சித்தல் என்பன.

மூலம்

அரசு, ஆல், அத்தி மூன்றினின்றெடுக்கும் திருநீறு திருமந்திரத்தின்கண் காணப்படுகிறது. அது வருமாறு:

"அரசுடன் ஆல்அத்தி ஆகும்அக் காரம்
விரவு கனலில் வியனுரு மாறி
நிரவயன் நின்மலன் தான்பெற்ற நீதர்
உருவம் பிரமன் உயர்குலம் ஆகுமே."

காரம்—திருநீறு. —க0. கசுசுஎ.

திருநீற்றின் மூலம் தூய ஆனின் சாணம் எனச் சேக்கிழார் அடிகள் அருளுகின்றனர். அது வருமாறு:

"சீல முடைய கோக்குலங்கள் சிறக்கும் தகைமைத் தேவருடன்
கால முழுதும் உலகனைத்தும் காக்கும் முதற்கா ரணராகும்
நீல கண்டர் செய்யசடை நிருத்தர் சாத்தும் நீறுதரும்
மூலம் அவதா ரஞ்செய்யும் மூர்த்தம் என்றல் முடிவேன்னே."
—கஉ. சண்டேசுர - உக.

நீறுதருமூலம்—சாணம்.

பேரொடுக்கப் பெருமான் எல்லா உலகங்களையும் எல்லா உடலங்களையும் நீறாக்கிப் பேரொடுக்கம் செய்வன். பேரொடுக்கம்—சர்வசங்காரம். அந்நீற்றினை ஆண்டவன் அணிந்து தாண்டவம் ஆடுவன். அக்குறிப்புத் தோன்ற

எல்லாத் தெய்வங்களுக்கும் உறையுளாகிய தூய ஆனின் சாணத்தைத் திருவெண்ணீறுக்கி அணியச் செய்தருளுகின்றனன். மேலும் ஆன்மாக்களின் மலம் சிவஞானத் தீயாம் மெய்யுணர்வால் நீறுக்கப்படும் உண்மை குறிப்பது போன்றும்ஆகும், ஆன்களின் மலத்தைச் சிவபெருமானின் ஒருபுடை ஒப்பாம் தீயால் நீறுக்கி அணிந்துகொள்ளுவது.

நின்றசீர் நெடுமாறர் வெப்புநோயை நீக்கியருளியது. அப்பொழுது பாடியருளிய பதிகம் வருமாறு :

திருச்சிற்றம்பலம்

“மந்திரம் ஆவதும் நீறு வானவர் மேலதும் நீறு
சுந்தரம் ஆவதும் நீறு துதிக்கப் படுவதும் நீறு
தந்திரம் ஆவதும் நீறு சமயத்தில் உள்ளதும் நீறு
செந்துவர் வாய்உமை பங்கன் திருஆலவா யான்திரு நீறே (க)

வேதத்தில் உள்ளதும் நீறு வெந்துயர் தீர்ப்பதும் நீறு
போதம் தருவதும் நீறு புன்மை தவிர்ப்பதும் நீறு
ஓதத் தகுவதும் நீறு உண்மையில் உள்ளதும் நீறு
சீதப் புனல்வயல் சூழ்ந்த திருஆலவா யான்திரு நீறே. (உ)

முத்தி தருவதும் நீறு முனிவர் அணிவதும் நீறு
சத்தியம் ஆவதும் நீறு தக்கோர் புகழ்வதும் நீறு
பத்தி தருவதும் நீறு பரவ இனியதும் நீறு
சித்தி தருவதும் நீறு திருஆலவா யான்திரு நீறே. (ங)

காண இனியதும் நீறு கவினைத் தருவதும் நீறு
பேணி அணிபவர்க் கெல்லாம் பெருமை கொடுப்பதும் நீறு
மாணம் தகைவதும் நீறு மதியைத் தருவதும் நீறு
சேணம் தருவதும் நீறு திருஆலவா யான்திரு நீறே. (ச)

பூச இனியதும் நீறு புண்ணியம் ஆவதும் நீறு
பேச இனியதும் நீறு பெருந்தவத் தோர்களுக் கெல்லாம்
ஆசை கெடுப்பதும் நீறு அந்தம தாவதும் நீறு
தேசம் புகழ்வதும் நீறு திருஆலவா யான்திரு நீறே. (ரு)

அருத்தம தாவதும் நீறு அவலம் அறுப்பதும் நீறு
வருத்தம் தணிப்பதும் நீறு வானம் அளிப்பதும் நீறு
பொருத்தம தாவதும் நீறு புண்ணியர் பூசும்வெண் ணீறு
திருத்தகு மாளிகை சூழ்ந்த திருஆலவா யான்திரு நீறே. (சு)

எயிலது அட்டதும் நீறு இருமைக்கும் உள்ளதும் நீறு
பயிலப் படுவதும் நீறு பாக்கியம் ஆவதும் நீறு
துயிலைத் தடுப்பதும் நீறு சுத்தம தாவதும் நீறு
அயிலைப் பொலிதரு சூலத்து ஆலவா யான்திரு நீறே. (எ)

இராவணன் மேலதும் நீறு எண்ணத் தகுவதும் நீறு
பராவணம் ஆவதும் நீறு பாவம் அறுப்பதும் நீறு
தராவணம் ஆவதும் நீறு தத்துவம் ஆவதும் நீறு
அராஅணங் கும்திரு மேனி ஆலவா யான்திரு நீறே. (அ)

மாலொடு அயன்அறி யாத வண்ணமும் உள்ளதும் நீறு
மேல்உறை தேவர்கள் தங்கள் மெய்யது வெண்பொடி நீறு
ஏல உடம்பிடர் தீர்க்கும் இன்பம் தருவதும் நீறு
ஆலமது உண்டமி டற்றெம் ஆலவா யான்திரு நீறே. (கூ)

குண்டிகைக் கையர்க ளோடு சாக்கியர் கூட்டமுங் கூடக்
கண்திகைப் பிப்பதும் நீறு கருத இனியதும் நீறு
எண்திசைப் பட்ட பொருளார் ஏத்துந் தகையதும் நீறு
அண்டத் தவர்பணிந் தேத்தும் ஆலவா யான்திரு நீறே.(கo)

ஆற்றல் அடல்விடை ஏறும் ஆலவா யான்திரு நீற்றைப்
போற்றிப் புகலிநி லாவும் பூசுரன் ஞானசம் பந்தன்
தேற்றித் தென்னன்உடல் உற்ற தீப்பிணி யாயின தீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர் தாமே.''(கக)

—உ. சுசு-க-கக.

திருச்சிற்றம்பலம்

ஆளுடைய அடிகள் வெண்ணீறணியாதவர்களைக் காண்டற்கும் அஞ்சுகின்றேன் என்று அருளுவது காணின் எவர்தாம் நெஞ்சு துணுக்குறாதிருப்பர் ?

**"பிணியெலாம் வரினும் அஞ்சேன் பிறப்பினேடு இறப்பும் அஞ்சேன்
துணிநிலா அணியி னுன்தன் தொழும்பரோ டழுந்தி அம்மால்
திணிநிலம் பிளந்துங் காணுச் சேவடி பரவி வெண்ணீறு
அணிகிலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சும் ஆறே."**

—அ. அச்சப் - ரு.

திருவெண்ணீற்றுப் பொலிவுடன் திகழும் நெற்றி அம்மைஅப்பரை நினைக்கவும் நினைப்பிக்கவும் வாயிலாகிய நடமாடும் திருக்கோவிலாகும். அப்பொலிவிலா நெற்றி நலிவுதரும் பாழ் நெற்றியாகும். இவ்வுண்மை ஔவைப் பிராட்டியார் அருளிய வரும் திருப்பாட்டானும் உணர்க:

"நீறில்லா நெற்றிபாழ் நெய்யில்லா உண்டிபாழ்
ஆறில்லா ஊருக்கு அழகுபாழ்—மாறில்
உடன்பிறப்பு இல்லா உடம்புபாழ் பாழே
மடக்கொடி இல்லா மனை." —நல்வழி - உ௪.

இப்பாழ் நெற்றியினரே நன்மையாம் சிவனை மறப்பிக்கும் சிறப்பிலார். இத்தகையார் மலத்தினும் கொடியர். இவர்க்கு அஞ்ச வேண்டுவது அறன். மேலைத் திருப்பாட்டில் காணும் அச்சமும் இவ் அச்சமே யாம்.

### உறுதி

கோள் நீக்கமும், நீற்றுப் பகைவர்களை வெல்வதும் ஒரு தெய்வ நம்பிக்கையுடைய சைவர்க்குத் திருநீற்றுப் பேற்றால்ஆம் என்று ஆளுடைய பிள்ளையார் அருளுவது காண்க:

கோத்தலர் குழலியோடு விசையற்கு நல்கு
குணமாய வேட விகிர்தன்
மத்தமும் மதியுநாகம் முடிமேல் அணிந்தென்
உளமே புகுந்த அதனல்
புத்தரோ டமணை வாதில் அழிவிக்கும் அண்ணல்
திருநீறு செம்மை திடமே
அத்தகு நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. —உ. அரு - க௦.

## உ. சிவமணி

### கண்டி

சிவமணியினை உருத்திராக்கம் எனவும், மணி எனவும், கண்டி எனவும் கூறுவர். மணி என்பது கடவுள் மணி. இதனையே கடவுள் கண்மணி என்பர். திரு அடையாள மாலை என்பதும் இதுவே. செந்நெறியின் உடல், உண்மை உணர்தலாகிய திருவெண்ணீற்றுப்பூச்சு. உள்ளம், அனைத்துயிர்கள்மாட்டும் வைக்கும் கண்ணோட் டத்தின் அடையாளமாகிய சிவமணி. உயிர், மெய்யுணர்வு கைவரச்செய்து தூய்ய சிவனடிக்குச் சேர்ப்பிக்கும் 'சிவயநம' என்னும் திருஐந்தெழுத்து.

### ஆற்றலளிக்கும்

நீறு, சிவமணி, ஐந்தெழுத்து என்னும் மூன்றனுள் நடுவாகக் காணப்படும் சிவமணி காந்த ஆற்றலையும் மின் ஆற்றலையும் ஒருங்குடையது. அம் மணியினை அணிப வர்க்கு அவ்விருவகையானும் உயிராற்றல் பெருகும். நோய் அணுகாது. உடற்பொலிவும் வளமும் பெருகும். உடல் வலுவுண்டாகும். உடல் வலுவுண்டாகவே உள்ளத் துரன் உண்டாம். உள்ளத்துரன் உண்டாக நல்லொழுக்கம் பெருகும். நல்லொழுக்கம் பெருகுதலால் நன்மையே புரிவர். அக்குறிப்புத் தோன்றும் உருவகமாகக் கடவுள் கண்மணி என்றனர்.

### முக்கண்மணி

அதற்கோர் புனைந்துரையும் புகன்றனர். வலிய அசுரர்கள் மெலிய தேவர்களை நலிவுசெய்வர். அத்தேவர்கள் முக்கட்செல்வன்பால் முறையிடுவர். அச்செல்வன் அருளிரக்கத்தால் கண்ணீர் உகுப்பன். அக்குறிப்பே கடவுள் கண்மணியாகும். பேரிரக்கப் பெருமான் உயிர் துன்புறும்போது தானும் துன்புறுவன். துன்ப அடையாளம் கண்ணீர் உகுத்தல் அல்லவா? கடவுள் உண்மையில் இன்பத் துன்பம் இல்லாதவன்; எனினும்

உயிர்களோடு பிரிப்பின்றி விரவி நிற்றலால், "இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே" என்று அழைக்கப் படுகின்றனன்.

இறைவனின் வலக்கண் ஞாயிறு எனவும், இடக்கண் திங்கள் எனவும், நெற்றிக்கண் தீ எனவும் கூறுவர். இவற்றினின்றும் முறையே பன்னிரண்டு, பதினாறு, பத்து என்னும் துளிகள் வந்தன என்ப. பன்னிரண்டு என்பது ஞாயிற்றின் இருக்கையாகிய வீடு பன்னிரண்டு; அதுபோல் திங்களின் கலைகள் பதினாறு; தீயின் விளக்கம் பத்துப் புலன்களிலும் விளங்குவதால் பத்து இம்முறையில் உருத்திராக்க மரங்கள் உண்டாயின என்ப.

இம்மணிகள் செந்நீரைத் தூய்மைசெய்யும். மூளை' மூச்சுப்பை, குருதிப்பை, குண்டிக்காய், நரம்பு, நாடி முதலிய உள்ளுறுப்புக்கள் செவ்வையாக வேலை செய்யத்தக்க ஆற்றலைத் தந்து துணைபுரியும். அங்ஙனம் செய்வதற்கு ஏற்றவாறு உடம்பில் பல்வேறு இடங்களில் அம் மணிகளை இடையறாது அணியப்படுதல் வேண்டும்.

## கடவுள் தொடர்பு

மணிகளில் காணப்படும் இயல்பான நேர்கோடுகளை முகம் என வழங்குவர். அம்முகம் ஒன்று முதல் பதினாறு வரை காணப்படுகின்றன. இப்பதினாறும் ஒருபுடை ஒப்பாகப் புலம் பத்தும், பொருள்மறை எழுத்தைந்தின் பொருள் ஐந்தும், பேரின்பப் பெருவாழ்வு ஒன்றும் குறிப்பனவாகும்.

## அணிய வேண்டிய இடங்கள்

க. உச்சி, உ. சிரம், ங. காது, ச. கழுத்து, ரு. தோள், சு. மார்பு, எ. கை, அ. மணிக்கட்டு, கூ. கொப்பூழ் என்ப.

உச்சியில்: ஒரு மணி அணிதல் வேண்டும். சிரம் அல்லது தலையில்: தலை கொண்டமட்டும் அணிக. காது களில்: பொடி மணிகள் அவ்வாறு. கழுத்து: கழுத்துக்

கொண்டமட்டும் அணிக. தோள் : தோள் கொண்டமட்டும் அணிக. மார்பு : வண்டு அல்லது நெல்லிக்காய் அனைய மணிகள் முப்பத்திரண்டு. கொப்பூழ் : மறைவடம் அணிக. கையில் : பதினாறு, மணிக்கட்டில்: பன்னிரண்டு மாக அணிதல் வேண்டும். மறைவடம் என்பது திருஐந்தெழுத்தை எண்ணுவதற்கு வாய்ப்பாகப் பொடி மணி நூற்றெட்டு. மறை—மந்திரம்.

### மறை கணித்தல்

திருஐந்தெழுத்தை எண்ணும்பொழுது சிவமணி கையிற்கொண்டு ஒவ்வோர் உருவுக்கு ஒரு மணியாக மேல் நோக்கி உருட்டுதல் வேண்டும். இதனைச் சிவம்செய்தல் என்பர். சிவம் செய்தல் என்னும் சொல் செபம் செய்தல் என மருவி வழங்குகின்றது. செந்நெறிச் செல்வர்களாகிய நம்மைப் போலவே ஏனை மேல் கீழ் நாட்டு நெறியினர் அனைவரும் ஒவ்வோர் பொருள் மணிகளையே தத்தம் மறை கணித்தற்குப் பயன்படுத்துகின்றனர். நெறியினர் — சமயத்தார். கணித்தல்—செபித்தல்.

எடுத்துக்காட்டாகத் திருமால் நெறியினர் துளசி மணியினையும், வேதாந்தி சமணர் முதலாயினோர் பளிங்கு மணியினையும், மகம்மதியர், கிறித்துவர் முதலியோர் பல்வேறு பொருள்களையும் பயன்படுத்துகின்றனர். இவற்றுள் நாம் கையாளும் கண்மணியொன்றுமட்டும் இயற்கையாகக் காணப்படுகின்றது. ஏனையவெல்லாம் செயற்கையேயாம். கண்மணி இயற்கை அமைவோடு கடவுள்தன்மையும் சிறந்த ஆற்றலும் அமைந்தது. அங்ஙனமிருந்தும் ஏனைய நெறியினர் இடையறாது கைக்கொண்டொழுகக் கண்டும் நாம் கைக்கொள்ளாது பின்னிற்றல் வருந்தத்தக்கதொன்றாகும். இனியேனும் நாமெல்லாரும் ஒற்றுமையுடன் உவந்தேற்று ஒழுகுவோமாக.

### அணியும் முறை

மணிகளின் முகம் ஒன்றோடொன்று பொருந்தாதிருக்குமாறு இடையிடையே வில்லைகள் சேர்ப்பார்கள்.

அவ்வில்லைகள் பொன், வெள்ளி முதலியவற்றாலும், வில்வஓடு, சுரைஓடு முதலியவற்றாலும் ஆக்கப்படுவன. மாலையாகக் கோப்பது பொன் வெள்ளி முதலியவற்றான் ஆய கம்பிகளாலும், கொடிகளாலும், பட்டுக்கயிறுகளாலும் ஆகும். இவ்வில்லைகள் மணிகளின்கண் காணப்படும் மின் ஆற்றலைத் தனித்தனியாகப் பிரித்து நம் உடம்பின்கண் செலுத்தும். கயிறு, கம்பி, கொடி முதலியவை மணிகளின் மின்ஆற்றலைத் தொகுத்து நம் உடம்பின்கண் செலுத்தும். மின்னாற்றல் கூர்மைப்பகுதி வழியாக நன்றாக உட்செல்லும். கண்மணியின் மேற்பகுதி இடம் இடம் தோறும் கூர்மையாக இருப்பதை நாம் காணலாம்.

அணிந்தார்க்குஆம் பேறு

இம்மைக்கண் முறையாகச் சிவமணி அணிந்து அன்பு பூண்பார்க்கு உடல்நலமும், செல்வவளமும், நெடுவாழ்நாளும், இன்பவாழ்வும் பெருகும். அம்மைக்கண் ஆண்டவன் அடியிணை எய்தி மாறா இன்பம் துய்த்து மகிழ்வர்.

"நெக்கு ளார்வம் மிகப்பெரு கிந்நினைந்து
அக்கு மாலைகொ டங்கையில் எண்ணுவார்
தக்க வானவ ராய்த்தகு விப்பது
நக்கன் நாமம் நமச்சி வாயவே."

—ந. சகூ - க.

அக்குமாலை — கண்மணிமாலை. அக்கம் என்னும் சொல் அக்கு என்றாயிற்று.

"கண்டி பூண்டு கபாலங்கைக் கொண்டிலர்
விண்ட வான்சங்கம் விம்மவாய் வைத்திலர்
அண்ட மூர்த்தி அழல்நிற வண்ணனைக்
கெண்டிக் காணலுற் றாரங் கிருவரே."

—ரு. கூரு - கo.

கண்டி—கண்மணி; உருத்திராக்கம். இத்திருப்பாட்டு மெய்யடியார் கண்டிபூணும் மெய்ம்மை நவில்கின்றது. கண்டி பூண்பரேல் கடவுளை எளிதாகக் காண்பர்.

"கண்டியிற் பட்ட கழுத்துடை யீர்கரி காட்டிலிட்ட
பண்டியிற் பட்ட பரிகலத் தீர்பதி வீழிகொண்டீர்
உண்டியிற் பட்டினி நோயில் உறக்கத்தில் உம்மைஐவர்
கொண்டியிற் பட்டு மறக்கினும் என்னைக் குறிக்கொண்மினே,"
—ச. கூடு - சு.

இத்திருப்பாட்டு முழுமுதற் சிவனார் திருக்கழுத்தில் திகழும் கண்டியினைக் குறிக்கின்றது.

"பூதி அணிவது சாதனம் ஆதியில்
காதணி தாம்பிர குண்டலங் கண்டிகை
ஓதி யவர்க்கும் உருத்திர சாதனம்
தீதில் சிவயோகி சாதனம் தேரிலே." —க0. கசுசுஉ.

"ஆரங் கண்டிகை ஆடையும் கந்தையே
பாரம் ஈசன் பணியலது ஒன்றிலார்
ஈர அன்பினர் யாதுங் குறைவிலார்
வீரம் என்னால் விளம்புந் தகையதோ."
—கஉ. திருக்கூட் - சு

*தூயவெண் ணீறு துதைந்தபொன் மேனியும் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவரு சிந்தையும் நைந்துருகிப்
பாய்வதுபோலன்புநீர்பொழி கண்ணும் பதிகச்செஞ்சொல்
மேயசெவ் வாயும் உடையார் புகுந்தனர் வீதியுள்ளே."
—கஉ. திருநாவுக் - கச0.

தாழ்வடம்—கண்மணிமாலை; உருத்திராக்கம்.

"இவ்வகை நம்மை ஆளும் ஏர்வளர் தெய்வக் கோலம்
கைவினை மறையோர் செய்யக் கடிகொள்செங் கமலத் தாதின்
செவ்விநீள் தாம மார்பர் திருஅடை யாள மாலை
எவ்வுல கோரும் ஏத்தத் தொழுதுதாம் எடுத்துப் பூண்டார்."
கஉ. திருஞான - கஉகசு.

---

* 'சிந்தை' கஉ. திருஞா - ௩எ0.

திருஅடையாளமாலை—சிவமணிமாலை

"வையம் முறைசெய் குவனுகில் வயங்கு நீறே
செய்யும் அபிடே கமுமாகச் செழுங்க லன்கள்
ஐயன் அடையா ளமுமாக அணிந்து தாங்கும்
மோய்புன் சடைமா முடியேமுடி யாவ தென்றுர்."

—கஉ. மூர்த்தி - சுக.

"சந்த மேன்மலர்த் தாதணி நீறுமெய் தரித்துக்
கந்த மேவுவண் டொழுங்கெனும் கண்டிகை பூண்டு
சிந்தை தூயஅன் பர்களுடன் திருமணம் போத
மந்த சாரியின் மணங்கோணர்ந் தெழுந்தது மருத்து."

—கஉ. திருஞான - ககசுச.

மென்காற்று ஆளுடைய பிள்ளையார் திருமணங் காணத் தூய அன்பர்களுடன் வந்தது என உருவகிக்கப் பட்டுள்ளது. அது, பூந்தூளைத் திருவெண்ணீருக அணிந் தும், தேன்உண்ணவரும் வண்டுகளைக் கண்டிகையாகப் பூண்டும் வந்ததென்பது. இக்குறிப்பிஞல் கண்மணி வண்டு அல்லது நெல்லிக்காய் அளவு பருமன் இருப்பதே சிறப்பு.

திருஅடையாளம் பூண்டார் சிவன் எனப் பொலிவர்:

"செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரன்எனத் தொழுமே."

—மெய்கண்டான்தமிழ் சூ. கஉ.

சிவமணி பிறவி நோய் நீக்குவது மட்டும் அன்றி உடலுறு நோயையும் ஒழிக்கும். இச் சிவமணியை உரைத் துக் கொடுத்தால் பொதுவாகப் பல்வகையான நோய்களும் அகலும். சிறப்பாகச் சன்னியும் கபமும் தோன்றி ஏற் படும் இறப்புத் துன்பத்தையும் நீக்கும்.

---

